# காதல் சிறகு...

(குறுங்கவிதைகள்)



ப.மதியழக

நூல் பெயர்: காதல் சிறகு (குறுங்கவிதைகள்)

ஆசிரியர்: ப.மதியழகன்

மின்னஞ்சல்: mathi2134@gmail.com

கைபேசி: 9597332952, 9095584535

பதிப்பு: டிசம்பர் 2017

வெளியீடு: freetamilebooks.com

மின்னூலாக்கம்: ப.மதியழகன்

அட்டைப்படம்: பிரசன்னா

## என்னுரை

கடலிலிருந்து சிதறிய துளிகளானாலும் அதுவும் கடலின் ஒரு பகுதி தானே. கண்ணீர்த் துளிகளானாலும் மகத்துவம் மிகுந்ததல்லவா? மழைத்துளியை நான் எதனோடு ஒப்பிட முடியும். பெருவெடிப்பின் போது சிதறிய துளிகளில் ஒன்று தானே இந்தப்பூமி. சிறுசிறு சொட்டுக்களானாலும் நாள் முழுதும் காத்திருந்தால் பாத்திரம் நிரம்பிவிடாதா? ஒரு நாள் என்பது வினாடிகளின் சேர்க்கை தானே? காவியங்களெல்லாம் சிறுசிறு வரிகளால் கட்டமைக்கப்பட்டது தானே? சிறிய விதைக்குள் தானே அடங்கியுள்ளது விருட்சம். சிறிய அணுத்துளியிலிருந்து உருவானவர்கள் தானே நாம். இந்தக் கவித்துளிகளில் அநேகம் காதலைப் பற்றிப் பேசுகின்றன. வாசித்துப் பார்த்தால் சில முத்துக்களை உங்களால் கண்டுபிடிக்க முடியாதா என்ன?

ப.மதியழகன்
115,வள்ளலார் சாலை,
ஆர்.பி.சிவம் நகர்,
மன்னார்குடி - 614001.
திருவாரூர் மாவட்டம்.
தமிழ்நாடு,
இந்தியா.
cell:9597332952, 9095584535
mathi2134@gmail.com

வசந்த காலத்தை
விடை கொடுத்து
அனுப்பினேன்
முழுநிலவு சாட்சியாக.

கோயில் மணியை
அடிக்காதீர்கள்
புறாக்கள் பறந்துவிடும்.

பட்டாம்பூச்சியை
பின்தொடர முடிந்தால்
கடவுளைக் கண்டுவிடலாம்.

கனவில்
மழை பெய்தது
விடிந்ததும்
வாசல் சென்று
பார்த்தேன்
மழை பெய்த
சுவடே இல்லை.

குளிர்
கணப்பு அருகே
விரைத்த உடல்கள்.

குடிசைக்கு
வெளிச்சம் தர
ஒரு மெழுகுவர்த்தி
போதும்.

புத்தர் நடந்தார்
அவரது நிழல்
பாவிகளின் மீது
விழுந்தது.
எல்லோரையும்
உறங்கச் செய்துவிட்டு
இரவு முழுக்க நிலா
கொட்ட கொட்ட
விழித்துக் கொண்டிருக்கிறது.

காணாமல் போன
பொருட்கள்
சிலசமயம் கிணற்று
வாளிநீரோடு
சேரந்து வரும்.

நிலா பார்த்தலில்
நிலவை மட்டுமா
பார்க்கிறோம்.

மனிதன்
தன்னுடைய ஆசைகள்
பூர்த்தியடையாமலேயே
மரணமடைகிறான்.

முதுமையின் கண்களில்
மரணம் தெரிகிறது
கைத்தடி கல்லறைத்
தோட்டத்திற்கு வழி
கேட்கிறது.

கனியில்லாத மரங்களை
அணில்கள்
நாடுவதில்லை.

உள்ளக் கடலிலிருந்து
எண்ண அலைகள்
எழுந்து ஓயாமல்
கரையைத் தழுவிக்
கொள்கிறது

சாதாரண நாள்
ஒரு காக்கை காத்திருக்கிறது
மதில் சுவரில்
ஒரு பருக்கைக் கூட
இல்லை.

கூட்டுப்புழு
வானில் எழும்ப
முயற்சித்ததைக் கண்ட
கடவுள் அதற்கு
சிறகுகளைத் தந்தார்.

கோயில் வாசலில்
பிச்சைக்காரன் திருவோட்டில்
காசு விழும்
ஓசையை கடவுள்
ரசித்துக் கேட்டுக்
கொண்டிருந்தார்.

விடிந்து விட்டது
மனம் மட்டும்
குயில் பாடும் கானத்தில்
லயித்துக் கிடந்தது.

வானளவு அதிகாரம்
படைத்த மனிதனால்
ஒரு மொட்டை
மலரச் செய்ய
முடியுமா?

மலர்களின்
கனவுகளில்
பட்டாம்பூச்சி சிறகடிக்கும்.

தோட்டம் கைமாறினாலும்
பட்டாம்பூச்சி அனுமதி பெறுகிறதா
தோட்டக்காரனிடம்
தேனருந்த.

பிரிவை நினைத்து
ஏங்குவதில்லை வானம்
கதிரவன் தான்
காலையில் உதிக்கப்
போகிறதே.

இறைவனுக்கு
ஏக்கமாய் இருக்காதா
வடம் பிடிக்கும்
தேவதைகளையெல்லாம்
விட்டுவிட்டு
திரும்பவும் கோயிலில்
குடியேறுகிறான்.

வாகனங்கள்
வேகத்தைக் குறைக்கின்றன
சாலையோர குளம் முழுவதும்

வெண்தாமரைகள்.

பூக்கள்
பேச ஆரம்பித்தால்
யாராவது
சூடிக் கொள்வார்களா.

கரையின் விதியை
அழித்து அழித்து
எழுதுகிறது அலை.

மூடிய கைகளுக்குள்
மூச்சுத் திணறுகிறது
உலகம்.

எண்ண அலைகள்
எழுந்து எழுந்து
அடங்குகிறது
கரையைத்
தாண்டவேண்டுமென்ற
அதன் பேராவல்
தணியவே இல்லை.

எல்லையற்ற வானம்
அலைகள் ஒதுக்கும்
நுரையில் பிரதிபலிக்கிறது.

கேள்விக்கு விடைதெரியாத
காற்று
அங்குமிங்கும் அலைகிறது.

தேவதைகள் சிறகுகளைத்தர
தயாராகவே இருக்கின்றன
எண்ணச் சுமை தான்
மனிதனை பறக்கவிடாமல்
தடுக்கின்றன.

கடலின் சுயசரிதையை
அலை வந்து
கரையில் எழுதிச்
செல்கிறது.

வீட்டின் மூடியிருக்கும்
கதவின் வழியாக
இரவு எப்படி
வெளியேறுகிறது.

வாழ்க்கை நதியின்
இயல்வு
ஓடிக்கொண்டே
இருப்பது.

இந்த உலகத்தில்
எந்த வாசல் வழியாக
மனிதர்கள் நுழைகிறார்கள்.

மனிதன் தொலைத்தது
வாழ்வை மட்டுமல்ல
சுவர்க்கத்தின்
சாவியையும் தான்.

சூரியன்
இருளைத் தேடுகிறது
ஆனால் பரிதி
உதித்தவுடன்
இருள் அகன்றுவிடுகிறது.

உறக்கத்தில் தான்
கனவுப்புத்தகத்தை
வாசிக்க முடிகிறது.

சருகுகள்
காற்றின் கால்களைக்
கொண்டு நடக்கின்றன.

நம்பிக்கை வேர்களை
வாழ்க்கைப் புயல்
அசைத்துப் பார்க்கிறது.

காதல் கற்பனை
சிறகு விரிக்க
கற்றுத் தருகிறது
தோற்கும் போது
நினைவுகளைச் சாகடிக்க
மதுவை நாட
வேண்டியதாய் இருக்கிறது.

காலியான கோப்பை
தெரியப்படுத்துகிறது
அவன் காதல் மதுவை
பருகியிருப்பதை.

பிரகாசமான சூரியனைவிட
மின்னும் நட்சத்திரங்களே
வானுக்கு அழகு
சேர்க்கின்றன.

கரையில்
எவ்வளவு காலம்
காத்திருந்தாலும்
சலனமற்ற கடலை
காண முடியாது.

நடனம் பயிலாத
மயிலின் நாட்டியத்துக்கு
மவுசு அதிகம்.

வெளியில் பெய்யும்
மழையில் நனைய
காற்று கதவைத்தட்டி
அழைத்தது.

மூடப்படாத சாளரத்தின்
வழியே நிலவு
எட்டிப் பார்த்தது.

வார்த்தைகள்
உரசிக் கொண்டதில்
மௌனம் உடைந்தது.

மழை பெய்தது
கிழிந்து போன குடை
வழியாக வானம்
தெரிந்தது.

பட்டாம்பூச்சியின்
வருகையை
தோட்டத்துப் பூக்கள்
ஆவலோடு
எதிர்பார்க்கின்றன.

நதியின் போக்கில்
செல்ல துடுப்பை
வலிக்காமல் இருந்தாலே
போதும்.

விருப்பமில்லாவிட்டாலும்
கனவுலகில் வாழ்ந்து
தொலைக்க
வேண்டியிருக்கிறது.

மழை பெய்து
இரண்டு நாட்களாகிவிட்டது
பள்ளத்தில் தேங்கியிருந்த
தண்ணீர் அதை இன்னும்
ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கிறது.

அலைகளின் நடனத்தை
யாரும்
மிஞ்ச முடியாது.

எனது கோப்பை
நிரம்பி வழிகிறது
மௌனம் சூழ்ந்த
அறையில் கடிகாரத்தின்
டிக் டிக் ஓசை
கேட்கிறது.

அழகு கூடவே
ஆபத்தும் இருக்குமென
ரோஜாச் செடியை
பார்த்தவுடன் புரிந்தது.

எடுத்து வந்த
குடையை விரித்தால்
கிழிசல் அன்று
குடைகளுக்குள்ளேயும்
மழை பெய்தது.

எந்த வேலையையும்
ஈடுபாட்டுடன் செய்வதெப்படி
என்று செருப்பு தைப்பவன்
கற்றுக் கொடுத்தான்.

கூட்டுப்புழுக்களின்
கனவுகள்
பறப்பதைப் பற்றியதாகவே
இருக்கும்.

பூவின் சுகுந்தம்
வண்டுகளை
வாவென்றழைத்தது.

ஏழு வண்ணங்களைக்
கொண்டு இவ்வளவு
நேர்த்தியாக யார்
வர்ணமடித்தது வானத்துக்கு.

விளையாட்டு பொருட்களை
வாங்க பேரம்
பேச வேண்டாம்
குழந்தையின் முகத்தைப்
பார்த்தால் அதிகம்
கேட்கத் தோன்றாது.

கார்த்திகை தீபத்தன்று
காற்றோடு போராடிப்
பார்க்கின்றன
அகல்விளக்குகள்.

வீட்டுக்கு வந்தவுடன்
காபி தந்து உபசரிப்பவர்களிடம்
எப்படி கடன் கேட்பது.

வாழ்க்கையின்
நிதர்சனத்திலிருந்து
தப்பிப்பதற்கு
கனவுகளில் வாழ
வேண்டியிருக்கிறது.

என்றும் வற்றாத
ஓவியத்திலுள்ள நதி
ஓடிக் கொண்டிருக்கும்
நதியைப் பார்த்து
சிரித்தது.

என்றும் வற்றாத
ஓவியத்திலுள்ள நதி
ஓடிக் கொண்டிருக்கும்
நதியைப் பார்த்து
சிரித்தது.

இரவின் தனிமை
என்னால் தூங்க முடியவில்லை
பொழுது நகரும் வேகம்
ஆமைபோல் இருந்தது.

தூக்கம் வரவில்லை
தெருவில் இறங்கினேன்
என்னோடு விழித்திருந்தது
ஒற்றை நிலா.

விரைந்தோடி மறைகிறது
பொழுதுகள்
நீலவானத்தின் வெறுமை
என்னைச் சூழ்ந்து கொள்கிறது.

முழு நிலவு
பூமியின் மீது
வெளிச்சம் பாய்ச்சுகிறது
இதை ரசிக்காது
எப்படி கண்மூடி
உறங்குவேன்
இந்த இரவில்.

மீன் கொத்திப் பறவை
தண்ணீரில் ஏற்படுத்திய
சிற்றலைகளில்
நிலா தளும்புகிறது.

மொட்டை மரத்தில்
பழுத்த இலையொன்று
விழுவதற்கு நேரம்
பார்க்கிறது.
நிசப்தத்தில் மூழ்கியிருக்கும்
காட்டின் ஏகாந்தத்தை
மூங்கிலின் அசைவு
மௌனத்தால் கூரிய
வேல் பாய்ச்சுகிறது.

அலைகடல் எந்நேரம்
கரையைத் தாண்டுமென
யாராலும் கணிக்க
முடியாது.

நிலப்பரப்பு நீரில்
மிதந்து கொண்டிருக்கிறது
எப்போது வேண்டுமானாலும்
அது நீரில் மூழ்கும்.

இறந்தவுடன் ஆன்மா
நிரந்தரத்தை நோக்கி
பயணிக்கிறது.

மரணத்தைப் பற்றியே
புலம்பிக் கொண்டிருந்தால்
வாழ்க்கை முழுமை
அடையாது.

பொம்மலாட்டத்தில் நூலினை
தன்வசம் வைத்திருப்பவனே
விதியினை நிர்ணயிக்கிறான்.

காலச் சுழற்சியில்
சிக்கி அழிவதும்
மீண்டெழுவதுமாக இருக்கின்றது
இவ்வுலகம்.

நிலத்தின் மீது
போர்த்தப்பட்டது போல்
இருக்கின்றது பழுத்த இலைகள்
முத்து முத்தாக
அதன் மீது படிகிறது
பனித்துளி.

உலக நடப்புகளை
தீர்மானிப்பவன்
ஆற்றங் கரையில்
அமைதியாக
உறங்கிக் கொண்டிருக்கிறான்.

கனவுப் பறவையின்
எச்சத்தை விழித்தபின்
துடைத்துக் கொள்கிறேன்.

இரவில் ஒரே ஒரு
நிலவு பகலில்
ஒளிரும் ஒவ்வொரு மலரும்
பூமியின் நிலவாய்
இருக்கிறது.

தாழப் பறக்கும்
பருந்தின் கண்கள்
இரையின் மீதே
இருக்கும்.

வசந்தம் விடை
பெறப்போகிறது
இலைகளெல்லாம்
சருகுகளாகி உதிரப்
போகின்றன.

நினைவின் மேலடுக்குகளில்
வரும் எண்ணங்கள்
எனக்கு சிலுவையைப்
பரிசளிக்கிறது.

தெருவிளக்குகள்
அணைந்துவிட்டன
வெளிச்சம் தேவையில்லை
இவ்வழி எனக்கு
ஏற்கனவே பழக்கப்பட்டதுதான்.

இரவுப் பொழுதில்
மரத்தினடியில் நிழலாடுகிறது
அதை அலட்சியம்
செய்யாவிட்டால் மேற்கொண்டு
ஒரு அடி கூட
எடுத்து வைக்க முடியாது
என்னால்.

வீட்டினுள் திருடன்
நுழைந்த துளையிலிருந்து
முழு நிலவு தெரிந்தது.

நடுநிசியில்
வயோதிக நாய்
அலறியது அதன்
ஊடுருவும் கண்களில்
பேய்களின் அணிவகுப்பு.

வேர்களைப் பார்க்க
வேண்டுமென்றால் நீ
முதலில் மரமாக
வேண்டும்.

தலைக்கு மேலே
இருக்கும் நிலவை
யாரும் தொந்தரவாக
கருத மாட்டார்கள்.

நதியோட்டத்தில் மிதந்து
செல்ல நீச்சல்
தெரிந்திருக்க
வேண்டாம்.

நம்மை
மழைநீரிலிருந்து காப்பாற்றி
குடை நனைகிறது.

இதழ் விரிக்கும்
பூக்கள் அறியாது
மணமக்கள் தோல்களிலா
பிணம் செல்லும் பாதையிலா
என்று.

பலூன்கள்
உருவம் பெற்றவுடன்
குழந்தைகளின் கையில்தாவ
அடம்பிடித்தன.

குடுகுடுப்பைக்காரன்
வீட்டாளர்களின் ஜாதகத்தை
புட்டுபுட்டுவைப்பான்
தன் வயிற்றுப் பசிக்காக
அவர்களிடம்
கையேந்தி நிற்பான்.

மூங்கிலின்
மரணமே
புல்லாங்குழல்.

கடைசி நாளிலும்
முகம் மலர்ச்சியாக இரு
உனக்கு இன்னொரு
வாசல் திறக்கப் போகிறது.

காட்டுக்குள் மலர்ந்த
பூக்களின் மணம்
காட்டையே
சுற்றிச் சுற்றி
வரும்.

மரணக் கடலில்
மிதக்கின்ற
பிணங்கள் தான்
நாமனைவரும்.

துன்பமென்றாலும்
இன்பமென்றாலும்
சுரக்கும்
கண்ணீரின் சுவை
கரிப்புதான்.

ஒப்பனையற்ற
உனது முகத்தை
நான் எப்போது
பார்ப்பது.

நம்மை
ஒற்றறிய
சூரியனே நிழலை
நியமித்திருக்கிறான்.

காதலை
உன்னிடம் தெரியப்படுத்துவது
எப்படியென்று நான்
ஒத்திகை பார்த்துக்
கொண்டிருக்கிறேன்.

அழுது கொண்டே
பிறக்கும் உன்னை
பூமி அரவணைக்கிறது
இறந்து கொண்டே
இருக்கும் உனக்கு
ஒப்பாரியால்
பூமி உன்னுடனான
பிணைப்பை அறுக்கிறது.

தாகம் தீர்க்கும்
தண்ணீராக மண்மீது
பொழிந்து
தானும் கரைந்து
மேகம் தியாகம்
செய்கிறது.

சவக்குழி
வெட்டியவன்
மண்சரிவால்
புதைந்துபோனான்.

சொர்க்கத்துக்கு
செல்லும் பாதை
இருளடைந்து இருந்தது
நரகத்துக்கு
செல்லும் பாதை
ஒளிவிளக்குகளால்
அலங்கரிக்கப்பட்டு
இருந்தது.

வெயில்
கொளுத்தும் போது
நிழலில் தான்
தஞ்சமடைய
வேண்டியிருக்கிறது.

விளக்கேற்ற நீ
வருவதால் கோயிலையே
சுற்றிச் சுற்றி
வந்தேன் உன்
இசைவு கிடைத்ததால்
உண்டியலில் என்னையே
நான் காணிக்கையாக
தந்தேன்.

வாழ்க்கையின்
வசீகரம் அதன்
அடியாழத்திற்கு நம்மை
ஈர்க்கிறது.

கடலில் கால்
நனைக்காதே
பாற்கடலில்
பள்ளிகொண்டிருப்பவனின்
தூக்கம் கலைந்துவிடப்

போகிறது.

பிறப்புக்கு முன்
இறப்புக்கு பின்
வாழ்க்கைப் பக்கங்களை
முழுவதுமாக வாசிக்க
முடியாது.

வாழ்க்கைப் படகு
பாரம் தாங்காமல்
தண்ணீரில்
மூழ்குகிறது.

நீச்சல் தெரிந்தவர்களை
பறக்கவும்
பறக்கத் தெரிந்தவர்களை
நீந்தவும் விட்டுவிட்டு
இறைவன் வேடிக்கைப்
பார்க்கிறான்.

ஞாபகங்களை
சேமித்து வைத்துக்
கொண்டேன்
நடமாட முடியாதபோது
சற்றே ஓய்வெடுத்து
அசைபோடுவதற்கு.

இறைவனின்
கண்ணீர்த்துளிகள் தான்
நட்சத்திரங்கள்
அவனுடைய காதலியின்
நெற்றிப்பொட்டுதான்
நிலா.

தோல்வி ஒரு
சம்மட்டியடி

பேதலித்த நான்
எழுத்தில் பிதற்றுகிறேன்.

துரதிர்ஷ்டசாலி நான்
வாழ்க்கையில் என் முறை
வரும்போது மட்டும்
செயலிழந்து நின்றுவிடுகிறேன்.

இறை தூதர்கள்
தாங்கள்
மரணித்த பின்புதான்
மாட்சிமை பெற்றார்கள்.

காடுகளிலிருந்து
மிதந்து வரும் ராகம்
தொட்டில் குழந்தைகளை
தூங்கச் செய்கிறது.

கரைக்கு கொடுத்த
வாக்கை
காப்பாற்றத்தான்
மீண்டும் மீண்டும்
வருகிறது அலை.

எல்லாவற்றையும்
அடித்து சென்றுவிட்டது
வெள்ளம்
மனிதர்கள் வாழ்ந்ததற்கான
சுவடே இல்லாமல்.

இரும்பைப் பொன்னாக்கும்
ரசவாதத்தை
அறிந்து கொண்டவர்கள்தான்
வீதியில் பைத்தியமாய்
அலைந்து கொண்டிருப்பது.

தேவாலயத்தில் ஜெபம்
ஏறெடுக்கப்படுகிறது
பங்கு கொண்டவர்களின்
பாவங்கள்
மெழுகுவர்த்தியென
கரைகிறது.

போஸ்டரில் சண்டையிடும்
முக்கியப் பிரமுகர்களை
யாரென்று அறியாது
அதைத் தின்னும் மாடுகள்.

பிரியத்தை
கொட்டிக் கொண்டிருந்தேன்
மழை போல
அது கால்களை
வருடிச் சென்றது
கடலுக்கு.

கன்னமிட்ட வீட்டில்
மிச்சம் மீதி
எதுவுமில்லை
என் அறையில்
சிதறிக் கிடக்கிறது
உன் கடிதங்கள்.

நீ வாசித்த
புத்தகத்தில்
அடிக்கோடு இட்டிருக்கிறாய்
அதை நான்
வாசிக்க
வேண்டுமென்று.

நீ உன் இதயத்தில்
எனக்கு இடம் தராமல்
போகலாம் அதனால்
எனது காதல் அலைகள்
ஓய்வு கொள்வதில்லை.

எனது கல்லறையில்
காத்திருக்கிறேன் என
எழுதிவையுங்கள்
யாருக்காக என்று
அவள் இறந்ததும்
தெரிந்துவிடும்.

பூக்களை உதிர்த்து
மரம் உன்னை
ஆசிர்வதித்தது.

எவ்வளவுதான்
அடித்து திருத்தி
எழுதினாலும்
முற்றுப் பெறாமல்
போகிறது சில
கவிதைகள்.

பூமியில்
கால் பாவாமல்
நடக்கிறாள்
அவளைப் பின்தொடர்ந்து
சென்ற நான்
வியக்கிறேன்.

செடியில் இருந்ததைவிட
அவளது கூந்தலை
அலங்கரித்த போதுதான்
அழகாயிருந்தது ரோஜா.

கொடிக்கழியில்
காய்ந்த உன் உடை
என்னைப் பெயர்
சொல்லி அழைத்தது.

இந்த நூலகத்தில்
உள்ள அனைத்து
புத்தகங்களையும்
படித்துவிடலாம்
ஆனால் உன் மனதை
மட்டும் அறிந்து
கொள்ள முடியாது.

தெருவின் அத்தனை
அசுத்தத்தையும்
கழுவிச் சென்றது
மழை.

விழித்ததும் வந்து
சூழ்ந்துகொள்கின்றன
கவலைகள்.

தேடி அடைவதற்கு
முன்பே சித்தம்
கலங்கிவிடுகிறது.

கதிரவன் கடலில்
நழுவ
சாத்தானின் ஆளுகைக்கு
ஆயத்தமாகிறது உலகம்.

ஈமக்காட்டில்
மனிதர்கள் தொந்தரவு
இருக்காததால் பேய்கள்
நிம்மதியாக படுத்துறங்கும்.

கண் இமைக்கும்
ஒவ்வொரு கணமும்
உலகம் மறைந்து
தோன்றுகிறது.

சதுரங்க
காய் நகர்த்தலில்
வெட்டுண்ட சேனைகள்
மீண்டும் வந்து
விளையாட முடியாது.

மனப்பூட்டைத் திறக்கும்
திறவுகோல் தன்வசம்
இருப்பதே நல்லது என
கடவுள் முடிவெடுத்தார்.

சிந்தனையால்
கைவரப்பெறாதது ஒன்று
உண்டென்றால்
அது கடவுள் தான்.

வெற்றியின் சுமை
கனக்க
தோல்வி கடந்து
வந்த பாதையை
அந்நியப்படுத்தும்.

பிச்சைக்காரர்கள்
மிகுதியாக இருக்கும்
நாடு வல்லரசாவது
கனவில் மட்டுமே.

எதுவும் நிச்சயமில்லை
இங்கு ஆனாலும்
திட்டம் வகுக்கிறோம்
முன்கூட்டியே.

சம்பவங்களின்
வலைப்பின்னலில்
சிக்கித் தவிக்கிறான்
மனிதன்.

அவள் வரைந்து
வைத்த கோலம்
அழியாமலிருக்க
நான்
குடை பிடிக்கிறேன்.

முக்கியத்துவத்தை
இழந்த பிறகு
வாழ்வதில்
அர்த்தமிருக்காது.

சண்டையிடும் போதெல்லாம்
தோன்றுகிறது
எதிர்வீட்டுக்காரனுக்கு முன்னால்
நாம் இறந்துவிடுவோமோ என்று.

விசுவாசத்திற்கும்
ஒரு விலை கொடுக்க
வேண்டியிருக்கிறது.

தேர்தலில் வாக்கு
சேகரிக்க வீதிவீதியாக
வருபவர்கள்
ஜெயித்தவுடன்
ஆட்கொணர்வு மனு
போட்டாலும்
அம்புடமாட்டார்கள்.

ஆத்தா போனதைவிட
அப்பாவுக்கு மீசை
போனதே பெருசாய்
தெரிந்தது.

மேய்ச்சலுக்கு
ஏற்ற நிலத்தை
மந்தை ஆடுகள்
தீர்மானிப்பதில்லை.

கடவுள் பாவமன்னிப்பு
பெற்றுக் கொண்டிருந்தார்
மறைப்பிற்கு உள்ளே
சாத்தான் கடவுளின்
பிரார்த்தனையை
காது கொடுத்து
கேட்டுக் கொண்டிருந்தான்.

மரணம்
வீட்டினுள் நுழைய
அழைப்பு மணியும்
அழுத்தாது
அனுமதி வேண்டியும்
நிற்காது.

வார்த்தைகளை
ஆயுதமாக பயன்படுத்துவதால் தான்
மனிதனுக்கு ஆயுள் குறைகிறது.

இல்லாதவர்களுக்கு
மன்னன் வாரி வாரி
வழங்கியிருந்தால்
பாதாள அறைகளில்
புதையல் இருந்திருக்காது.

கடவுள் ஒரு கவிதை
எழுதியவன் இறந்துவிடுவான்
படைப்பு வாழ்து கொண்டிருக்கும்.

ஆதித்தாய்
சங்குகளிலிருந்து
பால் ஊட்டியது
சந்ததிகள்
அடித்துக் கொள்வதற்காகவா.

பகலில்
உன் நகக்குறியில்
நிலா
ஒளிந்து கொள்கிறது.

அவள் என்மீது
அம்பு தொடுக்கும்போது
எதிர்க்க முடியாமல்
காதல் என்னைத்
தடுத்துவிடுகிறது.

விபரீதம் புரியவில்லை
விபத்து நடந்த லாரியிலிருந்து
பெட்ரோல் திருடுபவர்களுக்கு.

காற்றுக்கு தலையாட்டிக்
கொண்டிருந்த இலைகள்
தரையில் சருகாகி
விழுந்தன.

எத்தனைப் பூக்கள்
கனியாகுமென்று
யாருக்கும் தெரியாது.

சிறுகிளையில்
வந்தமர்ந்து இளைப்பாறும்
பறவையின் நன்றி
வேருக்கு உரித்தாகுக.

தன்னலம் சிறிதுமின்றி
காற்றின் போக்கிலேயே
அணிவகுக்கின்றன
வெண் மேகங்கள்.

புனிதரின் குருதி
சிலுவையில் வழிந்து
மண்ணில் விழுந்தது.

பேருந்து புறப்பட்ட
சில நிமிடங்களில்
தோளில் சாய்ந்த
பக்கத்து சீட்டுக்காரன்
விடிகிற வரை
எழவே இல்லை.

போராளி கையிலிருக்கும்
பேனா
வாளைவிட வலிமையானது.

தெய்வம்
பேச ஆரம்பித்தால்
கோயிலில்
கூட்டமிருக்காது.

இலக்குகள்
புனிதமாக இருக்கும்
போது
வழிகள் ஏணிப்படிகளாக
இருக்கின்றன.

பேசுகிறவனைப் பார்த்து
பொறாமை கொள்கிறவன்
ஊமையாக இருக்க
வேண்டுமென்று
அவசியமில்லை.

எனக்கு மேலானவர்கள்
உமிழும் எச்சில்
என் மீது விழுகிறது
எனக்கு கீழானவர்கள்
பேசும் புகழுரைகள்
என்னை வந்து
ஒருபோதும் அடைவதில்லை.

வாழ்க்கை எனக்குத்
தங்கப் புதையலைத் தருகிறது
நான் உனக்கு
வெள்ளியைத் தரக்கூட
யோசிக்கிறேன்.

கெட்டவர்கள்
அரிதாரம் பூசுவதில்லை
நல்லவர்கள் முகமூடியை
கழட்டுவதில்லை.

சட்டம் என்ற
ஒன்று இல்லாவிட்டால்
சமூகத்தில் குற்றம்
என்பதே இருக்காது.

வாழ்க்கை
சாசுவதமானதல்ல
எல்லாமே மாயை
என்றாகிவிட்ட பின்பு.

கந்தலாடையை
தரித்தவன் தான்
நீ உடுத்தியிருக்கும்
பகட்டான ஆடையை
நெய்திருக்கிறான்.

சாத்தானுக்கு
கீழ்படியவில்லை என்றால்
உனது சிலுவையை
நீ சுமக்க வேண்டியிருக்கும்.

மலையளவு உணவு
உன் எதிரில் இருந்தாலும்
வயிறு நிறையத்தான்

வலையில் சிக்கிய
மீனை
கவ்விச் சென்றது
மீன் கொத்தி.

அவள் வரும் வரை
படித்துறை பாசியை
ருசித்துக் கொண்டிருந்தன
மீன்கள்.

குளத்தில்
துப்புரவுப் பணியினை
கூலி வாங்காமல்
மேற்கொள்கின்றன
மீன்கள்.

விட்டுக் கொடுத்துவிட்டேன்
என் நிழல் கூட
இப்போது எனக்குச்
சொந்தமில்லை.

இந்த இரவு
எப்படி பயணம் செய்கிறது
என்று உத்தேசிக்க
என்னால் முடியவில்லை.

யாரும் வழிநடத்தவில்லை
காற்றின் பாதையை
நிச்சயிப்பது யார்.

வார்த்தைகள்
நழுவிச் செல்கின்றன
நான் சொல்ல வந்ததை
எப்படி புரியவைப்பேன்
எதிர்ப்படும் நபரிடம்.

மனிதர்களை எடைபோடத்
தெரிந்தவர்கள்
வாழ்க்கையை எதற்காகவோ
அடகு வைக்கிறார்கள்.

நதியைத் கடப்பது
ஆபத்து எனத் தெரிந்திருந்தும்
குதிரை மீது நம்பிக்கை வைத்து
ஆற்றில் இறங்குகிறேன்.

மரணம் பற்றிய
புரிதல் வருவதற்குள்
வாழ்வு அஸ்தமித்துவிடுகிறது.

கணப்பு அருகே
அமர்ந்திருக்கிறேன்
மனத்தின் லகானை
பிடிக்க இயலாமல்.

எதை மறக்க
நினைக்கின்றேனோ
அது நினைவுக்கு
வருகிறது.

எத்தனை கூப்பாடு
போட்டாலும்
மரணம் பற்றிய புதிருக்கு
கடவுள் பதில் சொல்வதில்லை.

வெறுமை சூழ்ந்துகொள்கிறது
ஆதி சூன்யம்
கொஞ்சம் கொஞ்சமாக
விழுங்குகிறது என்னை.

ஆதிக்குயவன் தான்
படைத்த பொம்மைகளால்
திருப்தியுராமல்
மீண்டும் மீண்டும்
பழகிப் பார்க்கிறான்.

எல்லோரும் ஏற்கனவே
இறந்தவர்கள் தான்
பிணங்களாகத்தான்
அலைகிறோம்.

வாழ்க்கை ரம்மியமாக
கழிகிறது
வண்ணத்துப் பூச்சியின்
சிறகசைப்பை பார்க்க முடிகிறது
எப்போது அதன் இறக்கைகள்
மண்ணில் வீழ்கிறது.

இயற்கை இருப்பையே
கவித்துவமாக ஆக்கி
வைத்திருக்கிறது.

கவிதை வனத்தில்
நுழைந்தவர்கள்
வழி தப்பித்தான்
போகிறார்கள்.

கை கால்களில்
விலங்கிட்டு
சமயோஜிதமாக
நெருங்குகிறது
மரணம்.

கண்ணே நுழைவாயில்
உடலின் வாசல் வழியே
நுழைபவளை வலுக்கட்டாயமாக
வெளியேற்ற முடியவில்லை.

இரவுப் பயணத்தில்
வழியனுப்பிவிட்டுச்
சென்று விட்டார்கள்
துணை வருவது
நாடோடி நிலா
மட்டுமே.

ஆயுள் குறைவு
என்றாலும் மரணத்தின்
அருகாமையில் சிறகடித்துப்
பறக்க வண்ணத்துப்பூச்சியால்
மட்டுமே முடிகிறது.

இந்த மணல் வீட்டில்
குடியேறத்தான்
கடவுள் ஆசைப்படுகிறார்.

மாநகரத்தில்
விலாசம் கேட்டு
அலைபவர்களோடு
காற்றும் சேர்ந்து
கொள்கிறது.

பிறரைக் கவரக்கூடிய
ஒரு அம்சமும்
உன்னிடம் இல்லை
அதுபோதும் என்னை
நீ கவர்ந்ததற்கு.

நதியின் போக்கிலேயே
சென்றால்
கடலை அடைந்துவிடலாம்.

இலையாய் இருக்கும்போது
அண்ணாந்து பார்த்தவர்கள்
சருகாய் கீழே கிடந்தபோது
காலால் மிதித்தார்கள்.

வேண்டுதல்
நிறைவேறும்போது
கல் கடவுளாகிறது.

கண்ணை நோக்கினாள்
காதலில் விழுந்தேன்
கல்யாணமாகிப் போய்விட்டாள்
போதையில் மிதந்தேன்.

உங்கள் வாழ்க்கையை
அடகு வைத்து விடாதீர்கள்
விலைகொடுத்து வாங்க
தயாராய் இருப்பவர்களிடம்.

வலியுறுத்தி
திணிக்கப் பார்க்காதீர்கள்
விரும்பி ஏற்றுக்
கொண்டதற்கு இருக்கும்
மதிப்பே வேறு.

காதலில் தோற்றவர்கள்
கல்லறையில் கூட
நிம்மதியாக உறங்குவதில்லை.

நீ இருப்பாயானால்
நரகம் கூட
எனக்கு சுவர்க்கம் தான்.

ஊக்க மருந்து
எடுத்துக் கொள்ளாமலேயே
காலச் சக்கரம்
எவ்வளவு வேகமாக
ஓடுகிறது.

கடந்து வந்த
பாதையை நினைத்துக்
கொண்டால்
அதிகார மமதை
தோன்றவே தோன்றாது.

விழிப்புக்கும் உறக்கத்திற்கும்
இடையே அகந்தை செத்துப்போனது
கண்விழித்ததும் ஓடிவந்து
தோளில் அமர்ந்து
கொள்கிறது.

சிறு பார்வை நீ
வீசினால் போதும்
இந்த வீதியெல்லாம்
தேனாறாய் ஓடும்.

ஓடிச் ஜெயித்தவர்கள்
மஞ்சத்துக்கு அழைக்கிறார்கள்
ஓடிக் களைத்தவர்கள்
காதல் விண்ணப்பம்
எழுதுகிறார்கள்.

காதல் சிறையில்
அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு
விடுதலையே கிடையாது.

இயேசு அதில்
மரித்திருக்காவிட்டால்
சிலுவைக்கு இந்த
மகத்துவம் கிடைத்திருக்காது.

பிறரைக் கவரக்கூடிய
ஒரு அம்சமும்
உன்னிடம் இல்லை
அதுபோதும் என்னை
நீ கவர்ந்ததற்கு.

நதியின் போக்கிலேயே
சென்றால்
கடலை அடைந்துவிடலாம்.

இலையாய் இருக்கும்போது
அண்ணாந்து பார்த்தவர்கள்
சருகாய் கீழே கிடந்தபோது
காலால் மிதித்தார்கள்.

வேண்டுதல்
நிறைவேறும்போது
கல் கடவுளாகிறது.

கண்ணை நோக்கினாள்
காதலில் விழுந்தேன்
கல்யாணமாகிப் போய்விட்டாள்
போதையில் மிதந்தேன்.

டாஸ்மாக்கில்
கொண்டாடுவதற்கு
கூடுபவர்களைவிட
திண்டாட்டத்திற்கு
மதுவை நாடுபவர்களே
அதிகம்.

உளி கல்லுக்கு
உருவம் கொடுத்தது
மனிதனின் பார்வையோ
அதைவிட
மகத்துவம் மிக்கது.

வினைப்பயனை
அனுபவிப்பதற்கு காத்திருப்பதே
மனித வாழ்க்கையாகிப் போனது.

கடலில் கால்
நனைக்கும் போது
கவனமாய் இருங்கள்
அலைவந்து குழிபறிக்கும்.

காற்று
கட்டியணைக்கத் துடிக்கிறது
வெட்கத்தினால்
மரம் வேண்டாம் என்று
தலையசைத்து மறுக்கிறது.

அவள் நட்சத்திரங்களின்
எண்ணிக்கையை அறிந்து
வரச் சொன்னாள்
நானும் பித்து பிடித்து
எண்ணத் தொடங்கினேன்
சில நாழிகைகளில்
அவளை மறந்து
வானத்தின் அழகில்
மனதை பறிகொடுத்துவிட்டேன்.

உங்கள் வாழ்க்கையை
அடகு வைத்து விடாதீர்கள்
விலைகொடுத்து வாங்க
தயாராய் இருப்பவர்களிடம்.

வலியுறுத்தி
திணிக்கப் பார்க்காதீர்கள்
விரும்பி ஏற்றுக்
கொண்டதற்கு இருக்கும்

மதிப்பே வேறு.

விழிப்புக்கும் உறக்கத்திற்கும்
இடையே அகந்தை செத்துப்போனது
கண்விழித்ததும் ஓடிவந்து
தோளில் அமர்ந்து
கொள்கிறது.

சிறு பார்வை நீ
வீசினால் போதும்
இந்த வீதியெல்லாம்
தேனாறாய் ஓடும்.

ஓடிச் ஜெயித்தவர்கள்
மஞ்சத்துக்கு அழைக்கிறார்கள்
ஓடிக் களைத்தவர்கள்
காதல் விண்ணப்பம்
எழுதுகிறார்கள்.

காதல் சிறையில்
அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு
விடுதலையே கிடையாது.

இயேசு அதில்
மரித்திருக்காவிட்டால்
சிலுவைக்கு இந்த
மகத்துவம் கிடைத்திருக்காது.

சொல்லிவிடலாம் தான்

ஏற்க மறுத்துவிடுவாயோ என
எண்ணி உன்னைச்
சுமந்தலைகிறேன்.

உனக்காக காத்திருக்கும் போது
தோட்டத்துப் பூக்கள் கூட
என்னை ஏக்கத்தோடு
பார்க்கிறது.
இந்த மழைத்துளி
என்ன தவம் செய்ததோ
உன் மேனியை நனைக்க.

நீ அலங்காரம்
செய்து கொள்ள
நிலைக்கண்ணாடியைப் பார்க்கிறாய்
உன் பிம்பங்களை
நான் கண்ணாடியில்
சிறை வைக்கிறேன்.

எவ்வளவு நாள்
பார்வையாலேயே
பேசிக் கொண்டிருப்பது
நேரடியாகப் பேச வேண்டும்
என எண்ணினாலே
கைகள் நடுங்கத்தான்
செய்கிறது.

உனது
பார்வை அம்புகள்
எத்தனை முறை
என்னை வீழ்த்தியிருக்கிறதென்று
அம்புகளை எண்ணிப்
பார்த்துக் கொள்கிறேன்.

இந்த நிலாவின் கிரணங்கள்
உன் மீதும் விழும் என்பதாலேயே
அண்ணாந்து வான் பார்த்துக்
கொண்டிருக்கிறேன்.

உனக்காக
கையில் ஏந்தி வந்த
ஒற்றை ரோஜா
நீ வராமலேயே
வாடிப் போய்விட்டது.

ஊரே தெய்வமாக
போற்றுகிறது உன்னை
வணங்கும் பக்தனாக
எத்தனை நாள்
காலம் கழிப்பது.

உன்னைச் சந்தித்த
பிறகு தான்
வாழ வேண்டும் என்ற
ஆசையே பிறந்தது.

வாழ்க்கை விரைந்தோடுகிறது
குறுகிய வாழ்நாளில்
காதலிப்பது குற்றமா என்ன?

செடிகளில் இருக்கும் போது
இல்லாத கர்வம்
நீ சூடும் போது வந்துவிடுகிறது
ரோஜாவுக்கு.

உன் உதட்டிலிருந்து
வெளிவரும் வார்த்தைகள்
பட்டாம்பூச்சிகளாக
பறந்து செல்கின்றன.

கதிரவனை வாவென்றழைக்கிறது
மலர்கள்
நீ இன்னும் தொட்டாற்சிணுங்கியாகவே
இருக்கிறாய்.

உன்னைத் தவிர
எல்லோருக்கும் தெரியும்
நான் உன்னைக் காதலிப்பது.

கண் இமைக்காமல்
பார்த்துக் கொண்டிருந்தேன்
உன் புகைப்படத்தை
உனக்கு புரையேறியிருக்குமா?

உன்னை மிக அருகில்
பார்த்த போது
சிலையாகி நின்றுவிட்டேன்.

அவள் எனக்கு
தெய்வமாகத் தெரிகிறாள்
நான் அவளுக்கு
என்னவாகத் தெரிகிறேனோ.

எனது வான வீதியில்
நீ ஏன் ரதத்தைச்
செலுத்துகிறாய்.

ஒரு மழை நாளில்தான்

உன்னை முதல் முறையாக
பார்த்தேன்
உன்னை மறக்க
நினைக்கும் போதெல்லாம்
மழை வந்து
ஞாபகப்படுத்திவிடுகிறது.

நீ பட்டாசை
பற்ற வைத்தாய்
என் இதயமல்லவோ
வெடித்துச் சிதறுகிறது.

பொக்கிஷத்தை
பெட்டகத்தில் சேகரித்து
வைத்திருக்கிறேன்
உன்னை நினைவுபடுத்தும்
அனைத்தையும் அதில்
சேமித்து வைத்திருக்கிறேன்.

உனது தரிசனம்
கிடைக்கப் பெற்ற
ஒவ்வொரு நாளிலும்
ஒரு ரூபாயை உண்டியலில்
போட்டிருக்கிறேன்
உண்டியல் நிரம்பக் காணோம்.

நான் அறைக் கதவைத்
தட்டினேன்
தேவதை கதவைத் திறப்பாள்
என்றறியாமல்.

கோயில் பிரகாரத்தைக்
சுற்றுகிறேன்
சந்நதியில் நின்றிருக்கும்

உன்னையும் சேர்த்து.

காதலுக்கு சின்னம்
இருக்குது காதலித்தால்
ஏனோ ஊர் கூடி நின்று
எதிர்க்குது.

காதல் படகில்
காதலர்கள் யாருமற்ற
தீவை நோக்கி
பயணிக்கிறார்கள்.

காதலுக்கு கோயில்
கட்டினால் அது
காதலிக்கும் சேர்த்துக்கட்டியது
போலாகுமா.

இந்தக் கணத்தில்
நினைத்துப் பார்க்கிறேன்
என் காதலுக்காக தூது
சென்றவனை.

மொட்டை மாடியிலிருந்து
அவள் நிலவைப் பார்த்தாள்
நான் அவளைப் பார்த்தேன்.

ஓவியம் உயிர் பெற்று
வந்தது தெரியாமல்
அவளைப் பின்தொடர்ந்தேன்
அவளோ சித்திரத்துக்குள்ளே
சென்று மறைந்தாள்.

எல்லோரும்
கைவிட்டுவிட்டார்கள் என்னை
காதலைத் தவிர.

குலதெய்வத்துக்கு
தெரிந்திருக்கும் நான்
பலி ஆடா என்று.

எல்லோரும் அண்ணாந்து
கலசத்தைப் பார்த்துக் கொண்டு
இருக்கிறார்கள் நானோ
கண்ணெதிரே தெய்வத்தைப்
பார்த்துக் கொண்டு இருக்கிறேன்.

காகிதத்தில் உன்
நிழல் விழுந்த போது
கவிதையாகி இருந்தது.

கரப்பான்பூச்சியைக்
காணும் போதெல்லாம்
நீ ஓடோடி வந்து
என்னைக் கட்டிக் கொள்கிறாயே
என்ன செய்ய.

சுயம்வரத்தில்
என்னைப் போல்
ஒன்பது பேர் வந்தாலும்
நீ என்னைக்
கண்டுபிடித்து விடுவாய்.

சாலையோரம்
மரங்களை நடுவதெல்லாம்
உனக்கு நிழல்தரத் தானா?

திருவிழாக் கூட்டத்தில்
தொலைந்து
போகக் கூடியதா
எனது காதல்.

எத்தனை தடைகள்
வந்தாலும் விதி
நம்மை ஒன்று
சேர்க்கும்.

தூரத்தில் மின்னல்
மழை மனிதன்
தன் பரிவாரத்துடன்
வந்து கொண்டிருக்கிறான்.

ஒன்றைப் பார்த்து
வியக்கும் போது
எங்கிருந்தோ குழந்தைமை
எட்டிப் பார்க்கிறது.

அலைக்கழிக்கும் காற்றுக்கு
தலைவணங்கி நிற்கின்றன
சருகுகள்.

தயாராய் இருக்கிறேன்
மரண ஆற்று வெள்ளம்
எப்போது வேண்டுமானாலும்
என் வீட்டை
மூழ்கடிக்கலாம்.

யுக சுழற்சியில்
என் மனம் சிக்கிக் கொண்டது
இருந்தாலும் என் கால்களுக்கு
பழக்கப்பட்ட பாதை தான் இது.

கவனமாய் இருங்கள்
வசந்தம் வருவதற்கான
அறிகுறிகள் தெரியவில்லை.

பொற்குவியல்களுக்கு
மேலே பிச்சைக்காரன்
காலம் காலமாக
கையேந்திக் கொண்டிருந்தான்.

வார்த்தை ஒரு ஆயுதம்
எய்பவரே முழுப் பொறுப்பேற்க
வேண்டும் விளைவுகளுக்கு.

வாழ்க்கையில்
தாம் தெரிந்தே
செய்த தவறுகள்
தமக்கு முன்னே
ஓடிப்போய் நரகத்தின்
கதவைத் தட்டுகின்றன.

ஒரு தடவை
மன்னிக்கலாம் அதையே
பழக்கப்படுத்திக் கொண்டால்
தவறு செய்பவனுக்கு
பயம் வராது.

ஒரு தடவைக்கு
இரு தடவை  எண்ணிப்
பார்த்துக் கொள்ள
வேணும் ஏனெனில்
நம்பிக்கை வைத்தவர்கள்தாம்
நம்மை
நட்டாற்றில் தவிக்க விடுவார்கள்.

அறியாமல் கூவுகிறது
சேவல் பொழுது புலராத
வேளையில்.

அந்தி வானத்தில்
வெளிச்சம் ஓய்வெடுக்க
இருள் எல்லோருடைய
அந்தரங்கத்திலும்
எட்டிப் பார்க்கிறது.

ஜீவிதத்தில் சுமையாயிருந்தது
தற்கொலைக்குப் பிறகு
வசிக்க ஓர் உடலைத் தேடுது.

அறிவைப் புகட்ட அல்ல
பள்ளிகள்
தேர்ச்சி பெறவே
தயார் செய்கிறது
மாணவர்களை கல்வி
நிறுவனங்கள்.

சிறார்கள் கையேந்துவதை
பார்க்கும் போதெல்லாம்
மாடு மேய்க்கத்தான்
நீ லாயக்கு என்று சொல்லி
தன்னிடம் படித்த
மாணவனை முதுகில்
பிரம்பால் அடித்தது
இன்று ஏனோ வலித்தது.

விவசாய நிலத்தை
பிளாட் போட்டு விற்கும்
போது யோசிக்க வேண்டும்
பேரம் படிந்தால்
பூமித் தாயை விற்கும்
ஈனச் செயலை நாம்
செய்யலாமாவென்று.

பரிசுப் பொருட்கள்
நினைவுபடுத்துகிறது
மறக்க நினைத்த உன்னை.

நெருப்பைக் கண்டு பிடிக்காத
காலங்களில் மனிதனை
மண்தான் தின்றிருக்கும்.

வெளிநாட்டு வேலை
என் மகளிடமே
அறிமுகப்படுத்திக் கொள்ள
வேண்டியிருக்கிறது என்னை.

வயிற்றுப்பாடுதான்
கையேந்த வைக்கிறது
அகந்தையை கொன்றுவிட்டு
திருவோடு ஏந்துகிறார்கள்
பிச்சைக்காரர்கள்.

நீங்கள் பார்ப்பது
சித்திரத்தினுள்ளே உள்ள
தீபச்சுடரை
ஓவியனின் வயிற்றில் எரியும்
பசிநெருப்பை யாராவது
உணவிட்டு அணையுங்களேன்.

இந்த ஓவியம்
என்னை தொந்தரவு செய்கிறது
கண்ணைவிட்டு அகல
மறுக்கிறது இதனைத் தான்
சங்கரன் மாயை என்றானோ.

அவனைப் பார்ப்பதே
அபூர்வம் தான்
படைத்தலை முடித்துவிட்டு
எந்த ஆற்றங்கரையில்
உறங்குகின்றானோ.

கடைக்கு வெளியே
வீசியெறியப்படும் டீ கப்பை

பொறுக்கி எடுத்துப் போய்
பிழைப்பு நடத்தும் அவனுக்கு
கட்டத்தில் என்ன
கிரகக் கோளாறோ.

பாவப்பட்ட நாட்டில்
முக்கால்வாசி பேர்
தரித்திரத்தில் உழலுகிறார்கள்
மீதி கால்வாசி பேர்
கவர்மெண்ட் சேவகர்கள்.

கவனமாய் இருங்கள்
காத்திருத்தல் ஒன்றைத் தவிர
வேறெதையும் இறைவன்
நம்மிடம் எதிர்பார்ப்பதில்லை.

விடியலில் மனம்
கணக்கு பார்க்கும்
மாலையில் கையேந்தும் நிலை
ஏற்பட்டுவிட்டதேயென
மனம் இரவெல்லாம்
கண்ணீர் வடிக்கும்.

என்னிடம் கேள்விகளாலான
மாலை ஒன்று இருக்கிறது
யாருக்கு அதை அணிவித்தாலும்
அவர்கள் தோளில்
கேட்காமலேயே வந்தமரும்
வேதாளம்.

சிவன் கவனம்
சக்தியிடம் திரும்ப ஏங்குகிறாள்
அவனோ சத்தியத்தைக் காப்பாற்ற
காபாலிக கூட்டத்தினரிடையே
மறைந்து மறைந்து தோன்றுகிறான்.

மல்லுக்குநிற்க
சொல்லிக் கொடுக்கின்றார்கள்
நாடு காடாகும் போது
சரணாலயம் தீர்வாகுமா.

விடுவித்துக் கொள்வது நல்லது
எல்லாவற்றையும் தோளில் சுமந்தால்
கடைசியில் அவனைச் சுமக்க
ஆள் வந்துவிடும்.

உன் ஞாபகங்கள்
நிழலாடும் போது
எடையற்று காற்றில்
மிதக்கிறது என் இதயம்.
காதல் மழையில்
நனைந்து கொண்டிருக்கிறேன்
தயவுசெய்து
குடை பிடிக்காதீர்கள்.

என்னை
காதல் வெள்ளத்தில்
தள்ளிவிட்டு
நீ கரையோரமாக
சென்று கொண்டிருக்கிறாய்.
தேவதைகள்
பறந்தல்லவா போவார்கள்
நீ நடந்து போகிறாய்.

உன்னைவிட பேரழகிகள்
இருக்கிறார்கள் தான்
ஆனால் உன்னைப் பாரத்ததும்
என் மனம்
கற்பூரமாய் கரைந்துவிடுகிறது.

என்னென்னவோ
பேச வேண்டுமென்று
எண்ணிக் கொள்கிறேன்
உன்னைப் பார்த்தவுடன்
என்னையே மறந்து போகிறேன்.

பேருந்துக்காக காத்திருக்கும்
உன்னை
அந்த இந்திரன் காணவில்லை
உன்னை நினைத்து
பைத்தியமானவர்களின் பட்டியலில்
என்னையும் சேர்த்துக் கொள்.

எத்தனை ஜென்மம்
காத்திருக்க நேர்ந்தாலும்
பரவாயில்லை நீ என்
காதலியாவதற்கு.

இருளில் நீ
நடந்து வரும் போது
வீதியெங்கும்
வெளிச்சம் வெள்ளமாய்
பாய்கிறது.

எட்ட நின்று என்னை
சுட்டெரிக்கிறாய்
அருகில் வந்ததும்
உன் கண்களிலிருந்து
நான் மறைந்து விடுகிறேன்.

உன் சிறு
புன்னகைகாகத்தான்
நான் தினமும்
தவம் கிடக்கிறேன்.

யாருக்கும் கிடைக்காத
பாக் கியம்
நீ கூந்தலில் சூடியுள்ள
பூவுக்கு கிடைத்திருக்கிறது.

பர்ஸில் உள்ள
உன் புகைப்படத்தை
அவ்வப்போது
பார்த்துக் கொள்வேன்
எனது எனர்ஜி மீட்டரின்
அளவு குறையாமலிருக்க.

வெள்ளிக்கிழமையானதும்
கோயிலுக்கு வருவாய்
வரம் வேண்டி வாயிலில்
காத்திருப்பவனை ஏறெடுத்து கூட
பாரக்காமல் செல்வாய்.

ஆயிரம் பெண்களுக்கு
மத்தியில் உனது
கொலுசின் ஓசை
உன்னை எனக்கு
காட்டிக் கொடுத்துவிடும்.

தன்னை மறந்த
உறக்கத்தில் கூட
மனம் விழித்திருக்கிறது
உன் வரவை எதிர்பார்த்து.

காதல் சிறையில்
எண்ணற்ற கைதிகள்
தப்பிக்கும் முயற்சி
யாருக்கும் கைகூடவில்லை.

ஆயிரம் புத்தகங்களைப்
படித்திருந்தாலும் வீணே
அவளின் மனக்கதவை
திறப்பதற்குரிய உபாயம்
எதிலும் சொல்லப்படவில்லை.

மீண்டும் மீண்டும் வந்து
அவளுடைய கொலுசின்
ஓசையை கேட்டுச் செல்கிறது
அலைகள்.

என் மனஊஞ்சலில்
உட்கார்ந்து ஆட
அவளைத்தவிர யாருக்கும்
அருகதை இல்லை.

அவள் வீட்டு
அழைப்பு மணியை
அழுத்துகிறேன்
தொந்தரவாக நினைப்பாளோ
என எண்ணிக் கொண்டே.

ஓவியத்திலிருந்து
உயிர்பெற்று வந்தவள்
என்னையும் அழைத்துக்
கொண்டு ஓவியன்
கையிலுள்ள தூரிகைக்குள்
நுழைந்தாள்.

காதலர்களை
இறப்பு கூட பிரிக்கக்கூடாது
என்ற எண்ணத்தில்
எழுப்பப்பட்டது தான்
தாஜ்மஹால்.

அவரவர் எல்லையைத்
தாண்டாமல் இந்நாள்வரை
காதலின் புனிதத்தைக்
காக்கிறோம்.

அவ்வப்போது நீ
பார்வையை வீசிவிட்டுச்
செல்கிறாய்
அடிமனதில் ஏற்படும்
ஆழிப்பேரலையில் சடலமாய்
மிதக்கிறேன் நான்.

சில சமயங்களில்
நியூட்டனின் மூன்றாம் விதியை
பொய்யல்ல என்று
நிரூபிக்கிறாள்.

அவளைக் காணாமல்
திரும்பும் போது
திருவிழாவில் தொலைந்து

போனவன் முகம் மாதிரி
தலையை தொங்கப்போட்டுக்
கொண்டு
வீட்டினுள் நுழைகிறேன்.
பற்றனைத்தையும்
துறந்துவிட்டேன்
உன்னையும் துறக்கச்
சொல்லும் துறவு
எனக்குத் தேவையில்லை.

திருவிளக்குகள்
அணைந்து போகும் முன்பு
அடியவர்களின்
வேண்டுதல்கள் நிறைவேறட்டும்.

எத்தனை முறை
வேண்டுமானாலும் பிரகாரத்தை
சுற்றி வா
அவதாரங்கள் பிறந்தாலும்
அவஸ்தைப்படத்தான்
வேண்டும்.

காதலர் தினத்தில்
காதலை விட உயர்வான
பரிசு எவை இருக்கமுடியும்.

கரை மீது
கொண்ட வேட்கை
இன்னும் தணியவில்லை
கடலுக்கு.

அவள் நடந்துவரும்
போதெல்லாம்
வான் மழைக்கு

மேகம் குடை பிடிக்கிறது.

பட்டாம்பூச்சியை
பின்தொடர்ந்து சென்றால்
அதன் குதூகலத்திற்கு
காரணம் கண்டறிய
முடியாதா?

நதிவெள்ளத்தை
கடக்க உதவியதற்காக
படகை தோளில்
சுமந்தலைய முடியுமா?

தூக்கத்தால்
மறக்கடிக்கப்பட்டவையெல்லாம்
விழித்த பின்பு
வரிசைகட்டி வந்து சிரிக்கின்றன.

இந்த
விசாலமான தோட்டத்தில்
எந்த மலரிலிருந்து
நறுமணம் கமழ்கிறது.

வானவில்லிலிருந்து தான்
பிறந்தன
எண்ணற்ற வண்ணங்கள்.

கைதட்டுபவர்கள் தான்

மேடைப் பேச்சை
முடித்து வைக்கின்றார்கள்.

எதிர்ப்படும்
மனிதர்களிடம் நீங்கள்
விலங்குகளைக் கண்டால்
கூண்டுக்குள் பதுங்கிக்
கொள்ளுங்கள்.

பொய்களுக்கு
கொடி பிடிக்கிறீர்கள்
உண்மை உங்கள் வீட்டு
கதவைத் தட்டினால்
உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள்.

பார்வைக்கு பூ
மட்டுமே தெரியும்
பறித்தால் முட்கள்
தான் இருப்பதை
உணர்த்தும்.

விளக்குகளை
எரிய விடாத காற்று
பற்றிய தீயை
அக்கம் பக்கமெங்கும்
பரப்பும்.

உயிர்களின் இயக்கம்
முடங்கிய இருளில்
நட்சத்திரங்கள் வீட்டின்
கதவைத் தட்டும்.

வெற்றி, மகுடம் தரலாம்
ஆனால் தோல்வியாலோ
சிகரம் தொடலாம்.
கனவு மயிலிறகாய்
வருடும் கண் விழித்ததும்
வாழ்வு பலிபீடத்திற்கு
அழைத்துச் செல்ல
கழுத்தில் மாலை போட்டு
அரிவாளை
சாணை தீட்டும்.

வாழ்க்கைப் புத்தகத்தில்
சிறிது சுவாரஸியம் குறைந்தாலும்
உனக்கு எழுதுகோல் தரப்படும்
அதில் குருதியை நிரப்பி
நீயொரு புத்தகத்தை எழுதவேண்டும்.

வாசிப்பை நிறுத்தி
விடாதீர்கள்
டாஸ்மாக்ல் இப்போதுள்ள
கூட்டமே போதும்.

அருள் வாக்கு சொல்லும்
பூசாரிக்குத் தெரியாது
எதிரே நிற்பவர்
கடவுளென்று.

மனம் பின்னும்
வலையில் தான்
மனிதர்கள் சிக்கிக் கொள்கிறோம்
நம்மை கருவியாக
பயன்படுத்தி காரியத்தை
சாதித்துக் கொண்டு
சக்கையாக சுடுகாட்டின் மீது
சடலத்தை வீசிச் செல்கிறது.

இழுத்துக் கொண்டு
போன நபரின்

உயிரைக் குடித்துவிட்டு
பிணத்தை கரை
ஒதுக்குகிறது கடல்.

ஊஞ்சலிலிருந்து
எழுந்துவிட்டேன்
எண்ணக் கடலிலிருந்து
ஆயிரமாயிரம் அலைகள்
எழுந்து கொண்டே இருந்தது.

காற்றின் கரங்கள்
அரும்பா, மொட்டா என
பேதம் பார்க்காமல்
மரத்தினை உலுக்குகிறது.

காலையில் கண்விழித்த
குழந்தை நினைத்தது
பொம்மையும் தூங்கியிருக்கும்
என்று.

காற்றைக் கிழித்துக்
கொண்டு முன்னேறுகிறது
புகைவண்டி
ஊர் போய்ச் சேர்ந்தாற்போதும்
என்ற அலுப்பு அதற்கில்லை.

காகிதத்தில் கப்பல் செய்து
மழைநீரில் விட்டுக் கொண்டிருந்தார்கள்
சிறுவர்கள்
கொஞ்ச நாட்களில்
வெள்ளத்தில் வீடே
மிதக்கப் போகிறது
என்பதை அறியாமல்.

எவ்வளவு சாமர்த்தியமாக
பேசினாலும்
வார்த்தை அந்தரங்கத்தை
வெளிச்சம் போட்டு

காட்டி விடுகிறது.

சமரசத்தை ஏற்காமல்
சண்டை போட்டுக் கொண்டிருப்பா போம்
ஆயுள் முழுக்க.

உனது கொலுசு
சத்தத்தை
கேட்டவுடன்
எனது இதயத்துடிப்பு
அதிகமாகிறது.

உன்னைப் பார்த்து
ரொம்ப நாளாகிவிட்டது
உன்னைக் கண்ட
நாளெல்லாம் எனக்கு
தீபாவளிதான்.

தேவதைகள் ஏனோ
பூமிக்கு வருகிறார்கள்
மானிடர்களுக்கு ஏனோ
கனவினைத் தருகிறார்கள்.

மணிக்கு ஒரு முறை
சந்தித்துக் கொள்கின்றன
கடிகார முட்கள்.

வார்த்தைகள் வசப்படவில்லை
உன்னை வர்ணிக்க
என் கவிதைகள் அனைத்தும்
நீ இட்ட பிச்சை.

நீயும் பார்ப்பாய்
என்பதற்காகத்தான்
நான்  நிலவைப் பார்க்கிறேன்.

நான் காத்திருக்கவில்லை
நம் சந்திப்புகளைப் பற்றி
இயற்கையுடன்
பேசிக் கொண்டிருக்கிறேன்.

மரத்திலிருந்து
விழும் மலர்கள்
உன்னை பெயர்
சொல்லி அழைக்கின்றன.

கடற்கரையில் தான்
நம் முதல் சந்திப்பு நிகழ்ந்தது
கடலலை துள்ளி வந்து
நம்மை ஆசிர்வதித்தது.

இரண்டு சூரியனை
உன் முகத்தில் கண்டதை
நான் வேறுயாரிடமும்
சொல்லவில்லை.

என் கண்ணீர்த்
துளிகள் தான்
மழையாக வந்து
உன் மேனியை
நனைக்கிறது.

உனது மனக்கதவை
தட்டிக் கொண்டே
இருக்கிறேன்
எப்போதாவது நீ
திறப்பாய் என்று
தவமிருக்கிறேன்.

காதல் நதியில்
அடித்துச் செல்லப்பட்ட
நீயும் நானும்
ஒன்றாயக் கரை
ஒதுங்குவோம்.

காற்றிடமாவது
சொல்லி அனுப்பு
நீ வரமுடியுமா
என்பதை.

காதல் நெருப்பால்
கொள்ளி வைத்தாய்
எனது இதயத்தின் விசும்பல்
வானம் வரை கேட்கிறது.

புத்தனுக்கு
வேண்டுமானால் ஞானம் தந்தது
போதி மரமாக இருக்கலாம்
எனக்கு நீ தான்.

நீ எவ்வளவு தொலைவில்
வந்தாலும் உனது
காலடி ஓசையை வைத்து
கண்டுபிடித்துவிடுவேன்
உனது வரவை.

கையேந்தி நிற்கிறேன்
காதல் பிச்சை
இடுவாயா.
தூக்கம் வரம்
கனவினில் நீ
வருவாய் என்பதால்.

அறை குப்பையாகியது
உனக்கு  எழுதிய
கடிதங்கள் எல்லாம்
பிள்ளையார் சுழியோடு
நிற்கிறது.

எதைப் பறிகொடுத்திருந்தாலும்
பரிதவித்து போயிருப்பேன்
இதயத்தை இழந்துவிட்டு
அவள் நினைவுகளை
சுமந்து வந்தேன்.

காதல் பரிசாக
நீ எதைக் கேட்டாலும்
கொடுக்க தயாராய் இருக்கிறேன்
நம் காதலைத் தவிர.

புகைப்படத்தின் பின்னே
கையெழுத்திட்டு தந்தாய்
என் தலையெழுத்தை மாற்றிய
உனது நிழற்படத்தை
பெட்டியில் பத்திரப்படுத்திக்
கொண்டேன்.

நீ அனுப்பிய கடிதம்
உனது கண்ணீர்த் துளிகளால்
நனைந்திருந்தது.

நீ என் காதலை
மறுதலித்த உடனே
மரணித்துவிட்டேன்
இப்போது வெறுங்கூடாக
நடமாடி வருகிறேன்.

காதல் மின்சாரம்
என்னையும் தாக்கியது
உயிரை ஏனோ
விட்டுவைத்தது.

இன்று உன் தரிசனம்
கிடைப்பதற்கு
வழி ஏற்படுத்தித் தருமா
இந்த விதி.

ஓவியக் கண்காட்சியில்
உன்னை விட அழகான
ஓவியத்தை
காணமுடியவில்லை.

கிழக்கில் உதித்த நிலா
மேற்கில் வந்து விட்டது
உனது வரவை எதிர்பார்த்து
வாசல் கதவை பார்த்துக்
கொண்டிருக்கிறேன்.

நாடோடியாக
அலைந்து திரிந்த நான்
அஸ்தமனத்திற்குப் பிறகு
உன் கண்கள் பிரகாசமாக
ஒளிர்வதைக் கண்டு
உன் மீது காதல் கொண்டேன்.

குளிர்க்காற்று
கணப்பு அருகே
உட்கார்ந்திருக்கிறேன்
உன் நினைவுகளோடு
சல்லாபித்தபடி.

அவள் கேசத்தில் சூட
பூ பறிக்கிறேன்
முட்கள் கிழித்து
விரல்களிலிருந்து இரத்தம்
வருவதை பொருட்படுத்தாமல்.

வதந்தி பரவட்டும்
என்பதற்காகவே
நாங்கள் ஜோடியாக
ஊரெல்லாம்
சுற்றித் திரிகிறோம்.

மரத்திலிருந்து
விழுந்த இலைகள்
அவளின் காலடி
மண்ணில்படாமல் காக்கிறது.

என்னவளின் கல்லறையில்
கானம் பாடுகிறேன்
என்னையும் அழைத்துக்
கொள்ளும்படி மனமுவந்து
வேண்டுகிறேன்.

காதல்நதியில்
நம் இருவரையும்
சுமந்தபடி
மிதந்துகொண்டிருந்தது
படகு.

கவலையை மறக்க
சிகரெட்
போதையில் மிதக்க
மது
தன்னிலை இழக்க
குமரி
வீழ்ந்தது அவன் மானம்
சிரமப்பட்டு
எழுவது தான் ஞானம்.

காதல் அகராதியில்
அவள் பார்வைக்கு
பொருள் தேடினேன்.

ஊர்கூடி தேர் இழுக்கும்
நிலைக்கு வந்தவுடன்
கூட்டம் ஆர்ப்பரிக்கும்.

சமுத்திரம்
வாவென்றழைக்கும்
அலைகள்
பாதங்களில் குழிபறிக்கும்.

பசியோடு படுத்தால்
கனவில் சோற்றுப்
பருக்கைகள் தான் தோன்றும்.

விலை கொடுத்து
எதை வேண்டுமானாலும்
வாங்கிவிடலாம் என்பதால் தான்
வாழ்க்கை பொருளற்று
போய்க் கொண்டிருக்கிறது.

பத்தினிமார்களின் கண்ணீரில்
குளிக்கக் கூடாது
சாபம் பெற்ற அகலிகை
ராமன் பாதம் பட்டவுடன்
உயிர்த்தெழுந்தது வேறு கதை.

ஓடிக்கொண்டிருக்கிறது நதி
கொட்டிக் கொண்டிருக்கிறது அருவி
உள்ளே உறங்கிக் கொண்டிருக்கிறது
மிருகம்.

தென்றல் இதமளிக்கிறது
புயல் பயமளிக்கிறது
நான்கு திசைகளும்
காற்றுக்கு அபயமளிக்கிறது.

குழந்தைகள் பொம்மைக்காக
பெரியவர்கள் பணத்துக்காக
கவிஞன் வார்த்தைகளுக்காக
முத்துக் குளிப்பது போல் தான்
கவிதைகள் படைப்பது.

படிப்பு என்ற போர்வையில்
பிள்ளைகளிடம் குழந்தைமையை
கொன்று விடுகிறோம்.

தேவிகுமரி கண்ணைச் சுற்றி
கருவட்டம் விழக்
காத்திருக்கிறாள்
சிவன் எந்தச் சுயம்வரத்திலும்
தலை காட்டுவதில்லை.

எல்லோரும் முகம்
சுளிக்கிறார்கள்
மழையைப் பார்த்து
வானம் பொய்த்தால்
சோறு கிடைக்காது.

சூல் கொண்ட மேகம்
பாரத்தை இறக்கி வைக்க
வழி தேடும்.

கொட்டிக் கிடக்கும்
சில்லறையாய்
நட்சத்திரங்கள்
எண்ணி முடிக்க
ஆயுள் போராது.

அலைகள்
வந்து வந்து
விசாரித்துப் போகிறது
கரையின் நலத்தை.

மார்கழி கடந்துவிட்டது
வண்ணக் கோலமிடுவதற்கு
அவள் வாசலில்
காட்சி தர இன்னும்
ஒரு வருடம்
காத்திருக்க வேண்டும்.

வயிற்றை ஊமையாக
படைத்திருந்தால்
ஏழைகள் கேவலத்தை
தேர்ந்தெடுத்திருக்க மாட்டார்கள்.
கல்கண்டாய் இனிக்கும்
நதி நீர் சென்று
சேர்வதென்னவோ
உப்புக் கடலில்.

தொழிற்சாலைகள்
உற்பத்தியை பெருக்குகின்றன
பாடசாலைகள்
கல்வியை அளிக்கின்றன
அடுக்களையில்
சோறு பொங்குகிறது
இவன் கவிதை
எழுதிக் கொண்டிருக்கிறான்.

வட்ட எல்லைக்குள்
கட்டப்பட்ட விலங்குகள்
பசியக் காட்டில் மேய்ந்து
திரிந்ததெல்லாம் கனவாக.

உடலை வருத்தி
வேலை செய்பவர்களின்
கூலியின் பாதியை
டாஸ்மாக் பறித்துக்கொள்ளும்.

வெள்ளத்தில்
அடித்துச் செல்லப்படுகிறது
குருவிக் கூடு
எந்தப் பறவை வந்து
ஏமாந்து போகுமோ.

கூண்டுச் சிங்கம்
கர்ஜிக்கலாம்
கோபத்தில் கம்பியை
அறையலாம்
சாப்பிட அடம்செய்யக்கூட
அனுமதியுண்டு
ஆனால்
வேட்டையாட மட்டும் கூடாது.

கூண்டுப் புழுவின் கனவெல்லாம்
பறப்பதாக
வண்ணத்துப்பூச்சியாக இது போதும்.

தனிமையை கலைக்காதீர்கள்
வலையில் சிக்கிக்கொண்ட
வார்த்தைகள் உங்களால்
தப்பிச் செல்வதைப் பாருங்கள்.

விழித்த பின்பும்
நம்ப முடியவில்லை
அது கனவென்று.

விலங்கிடப்படவில்லை தான்
அதனால் என்ன
பூமியில் எல்லோரும்
மரண தண்டனைக் கைதிகளே
வரையறுக்கப்பட்ட ஒன்றையும்
மனிதனால் மீற முடியாது.

விதவிதமான ஆஷ்ட்ரேயை
வீட்டில் வாங்கி வைத்துள்ளேன்
சாம்பல் கிண்ணத்தை
வெறுமனே பார்க்கச் சகிக்கவில்லை
எனவே
புகைத்துக் கொண்டிருக்கிறேன்.

மலை மாறுவதில்லை
பயணிப்பதும் இல்லை
நதி ஓடுகிறது
உப்புப் பாறையாக
மாறுகிறது.

பிணந்தின்னிக் கழுகுகள் தான்
ஜனங்களை
காத்து ரட்சிக்கும்
பெருமாளின் வாகனம்.

வந்த வேலையை
முடித்தால்
சென்று சேர வேண்டியதுதான்.

இருட்டு
ஆடைகளை அவிழ்த்து விடுகிறது
ஆதிமனிதர்கள் இப்படித்தான்
இருந்திருப்பார்கள் போல.

தோற்றவர்களின்
சரிதம் படிக்கிறோம்
ஆனால் ஜெயித்தவர்கள்
பக்கமே நிற்கிறோம்.

புயல் வலுக்கிறது
பேய் மழையால்
வாழ்க்கை

வீட்டுக்குள் முடங்குகிறது.

கண்ணுக்குத் தெரிவதில்லை
மரத்தின் பாரத்தைச்
சுமந்து கொண்டு
மண்ணுக்குள் இருக்கும்
வேர்கள்.

புஸ்தகங்கள்
உங்களுக்கு சிறகை
கொடுக்கும்
கை விலங்கை உடைத்து
விடுதலை அளிக்கும்.

அவள் பெருக்கி
கோலமிட்ட வாசல்
புழுதி படிந்து கிடக்கிறது
காற்று கதவிடுக்கில்
புகுந்து அவர்கள்
எங்கே எங்கே
என்று தேடுகிறது.

உன் வீட்டு நிலைக்கண்ணாடியானாலும்
உன்னுடைய உண்மைத் தோற்றத்தைத் தான்
அது பிரதிபலிக்கும்.

வெயில் காலத்தில் தான்
தெரிகிறது
நிழலின் அருமை.

குழம்பித் தவிக்காதே
ஞானம் வேறுமார்க்கமாக
உன்னை வந்து சேரும்.

கவிஞனுக்கு
ஆறாவது விரலாய் ஆனது
சிகரெட்.

வட்டி குட்டிப் போடுகிறது
கடனில் மூழ்கிய பின்
கோவணம் கூட மிச்சமிராது.

அவள் பத்துப் பாத்திரத்தை
தேய்த்துக்  கொண்டிருக்கிறாள்
இவன் தபால்காரனை
எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான்
கவிஞனென்றாலும்
வயிறு பசிக்கிறதே
என்ன செய்வது.

பார்க்க
படிக்க
எழுத
நிரம்பவே அது பயன்படுகிறது
மூக்குக் கண்ணாடியைத்
தொலைத்துவிட்டால்
அன்றைய வாழ்வு
சாதாரணமாய் கழியாது.

கலங்கித் தெளிந்த
குளத்து நீரில்
பரிதியின் பிம்பம்.

பொசிப்பேயில்லை
அடுக்களையில்
வெந்து போகும் அம்மாவுக்கு
ஒரு காட்டன் புடவை
வாங்கிக் கொடுக்க.

ஒன்றும் சொல்லிக்கொள்ள
முடியவில்லை
கவலைப்படுவதால்
ஒரு  அங்குலமேனும்
உயரத்தில்
அதிகப்படுத்த முடியுமா
என்ன.

இவனுக்கு கனவுகள் அதிகம்
மெய்ப்படாதது அநேகம்
குடும்பத்தில்
மற்றவர்கள் கனவை
கொன்ற தரித்திரம்
இவனை சும்மா விடாது.

அவளை
மறக்கச் சொல்லாதீர்கள்
என் இதயத்தை
அவளிடம் தொலைத்துவிட்டேன்.

கோடி நட்சத்திரங்கள்
வானில்
கொட்டிக் கிடந்தாலும்
என் மனம் சந்திரனையே
தேடுகிறது.

உன் கண்கள்
தூண்டில் போடுகிறது
வலைவீசி பிடித்த என்னை
உன் வீட்டிற்கு
எடுத்துச் செல்வாயா?

நீ என் காதலை
ஏற்றுக் கொள்ள வேண்டாம்

உனது ஞாபகங்கள் போதும்
நான் உயிர் வாழ.
என் நெஞ்சத்தில்
கோட்டை கட்டுகிறேன்
உன்னை குடிவைக்க.

உன்னை
நெஞ்சத்தில் சுமப்பதை
நடத்துனர் அறியமாட்டார்
இல்லையேல்
உனக்கும் சேர்த்து
டிக்கெட் எடுக்கச்
சொல்லி இருப்பார்.

நான் சும்மா
உட்கார்ந்திருந்தாலும்
என் மனசு மட்டும்
உன்னைச் சுற்றியே
வட்டமடிக்கிறது.

ஓயாமல் எழும்
அலைகளைப் போல்
உனது இருப்பு
தீயாக என்னை
எரிக்கிறது.

இடைவெளி
அதிகரிக்க அதிகரிக்க
காதல் எரிமலை
சீற்றம் கொள்கிறது.

கனவில் குடித்தனம்
நடத்துவது
அலுத்துப் போய்விட்டது

நாம் எப்போது
நிஜத்தில் குடித்தனம் நடத்துவது.

அனுமனைப் போன்று
நெஞ்சத்தில் வைத்து
பூஜிக்கிறேன்
என் காதல் தேவதையை.

நிலைக்கண்ணாடியை
பார்த்த போது தான்
தெரிகிறது
அவள் என்னை முழுவதுமாய்
ஆக்ரமித்துக் கொண்டிருப்பது.

உன்னை நினைத்து
என்னை மறப்பதும்
என்னை மறந்து
உன்னை நினைப்பதும்
வாடிக்கையாகிவிட்டது.

தீக்குச்சி தேவையில்லை
கண்ணாலேயே உண்டாக்கிவிடுவாய்
காதல் நெருப்பை.

காதல் தேவதையால்
சிறைவைக்கப்பட்டிருக்கிறோம்
நானும் அவளும்.

உன் கூந்தலை அலங்கரிக்கும்
ரோஜாப் பூவை
நான் தேடிக் கொண்டிருக்கிறேன்.

ஒரு மழை நாளில்தான்
உன்னை முதல் முறையாக
பார்த்தேன்
உன்னை மறக்க
நினைக்கும் போதெல்லாம்
மழை வந்து
ஞாபகப்படுத்திவிடுகிறது.

சாலையில்
நிலவு குடை பிடித்துக்
கொண்டு போவதை
நான் நேரில் பார்த்தேன்.

உன்னைப் பார்க்கவேண்டும்
என்ற உந்துதலால்
விடியலிலேயே  படுக்கையிலிருந்து
எழுந்து விடுகிறேன்.

உன்னைச் சுற்றிச்
சுற்றியே வட்டமிடுகிறேன்
பட்டாம் பூச்சியைப் போல்.

நீ வரைந்த
கோலத்தின் நடுவே
பூசணிப் பூவை
வைத்துவிட்டுச் செல்வது
யாரென்று உனக்குத் தெரியுமா?

என்னை மறந்தே
சுற்றிக் கொண்டிருக்கிறேன்
அவளுடைய நினைவு நாடாக்களால்
கட்டப்பட்டு கிடக்கிறேன்.

ஐம்புலன்களும்
வெவ்வேறு திசையில்
பயணிக்கின்றன
தேடுவதென்னவோ உன்
ஒருவளைத் தான்.

எல்லா
காதலர்களுக்காகவும்
நான் சிலுவை சுமக்கிறேன்.

யேசுவிடம் நான்
வேண்டினேன்
அவளுடைய பிரார்த்தனை
நிறைவேற வேண்டுமென.

தேவதை என நினைத்து
கிட்ட நெருங்கினால்
ராட்சசியாகி விடுகிறாள்.

சிவராத்திரியன்று
கண் விழிப்பதற்காக
எல்லோரும் தொலைக்காட்சியில்
படம் பார்ப்பார்கள்
அவளைக் கண்ட நாள் முதல்
எனக்கு சிவராத்திரி தான்.

ரோஜாவைப் பறித்து
அணிய வேண்டும்
என நெருங்கும்போதுதான்
முட்கள் கண்களில் படுகிறது.

உன் தலைக்குப் பின்னே
பிரகாசிக்கும் ஒளிவட்டத்தில்
நான் பார்க்கும் சக்தியை
இழந்து போகிறேன்.

வழித்தடத்தை மறந்து நான்
வேறு பேருந்தில் ஏறிவிட்டேன்
பாதியில் இறக்கிவிடப்பட்ட நான்
வீட்டு முகவரியையும்
மறந்துவிட்டேன்.

கடற்கரையில்
வரிசையில் வருகின்றன
அலைகள் உன்
கால்களை நனைக்க.

நீ வரைந்த
கோலத்தை
மழை வந்து நனைக்காமல்
குடை பிடிக்கிறேன் நான்.

தேவதையின் ஆடை
கொடியில் காய்கிறது
என் இதயமல்லவோ
பற்றி எரிகிறது.

செவ்வாயில் குடியேற
அவர்கள் ஆராய்ச்சி
செய்யட்டும்
உன் மனதில் குடிபுக
எனக்கு இடம் கொடேன்.

பிரகாரத்தைச் சுற்றினால்
பலன் கிடைக்கும்
உன்னைச் சுற்றினால்
காதல் வரம் கிடைக்கும்.

வீதியில் நீ
நடந்து செல்லும் போது
எல்லோரையும் வணங்க
வைக்கிறது உனதழகு.

தெய்வமே வருடத்தில்
ஒரு நாள் தான்
வீதியில் உலா வரும்
என்னவள் வீதியில்
வருகை தரும் நாளெல்லாம்
எனக்குத் திருவிழா தான்.

நீ பற்ற வைக்க
வேண்டாம்
சும்மா பார்த்தாலே
போதும்
பட்டாசு வெடிக்கும்.

இத்தனை வருடங்களாக
பார்த்துக் கொண்டே
காலத்தைக் கழித்துவிட்டோம்
எப்போது பேசி சிரிக்க
போகிறோம்.

சுடிதாரில்
பிறை நிலவாய்
இருக்கும் நீ
சேலையில்
பௌர்ணமி நிலாவாய்

ஆகிவிடுகிறாய்.

எதேச்சையாக
ஜன்னலில் உன்னைக்
கண்டேன்
உன் வட்ட விழிகள்
விழித்திருக்கும் வலையில்
சிக்கிக் கொண்டேன்.

கவிதை பேசும்
கண்கள்
உன் ஒருவளுக்குத் தான்
வாய்த்திருக்கிறது.

உன் கூந்தலை
அலங்கரிக்க
செடியுடனான உறவை
முறித்துக் கொள்ள
ரோஜாக்கள் தயாராய்
இருக்கின்றன.

கைரேகை
பார்க்கின்றவன்
கண்டுபிடித்து விடுவானா
அவள் காதலில்
விழுந்திருப்பதை.

மின்னஞ்சலிலோ
குறுஞ்செய்தியிலோ
காதலை தெரிவிக்க
விருப்பமில்லை எனக்கு
நீ படித்தவுடன்
முத்தமிடுவாய் என்பதற்காகத்தான்
காகிதத்தில் எழுதுகிறேன்.

ஒவ்வொரு நாளும்
அவள் விடைபெறுகையில்
இரவை சபிக்கத் தோன்றுகிறது
பேசாமல் சூரியன் மறையாத
நாடாக இந்தியா இருந்துவிட்டால்
என்ன என்று நினைக்கத் தோன்றுகிறது.

உனது சிநேகிதியிடமிருந்து
வாங்கிய உன்
புகைப்படத்தில் தான்
நான் காலையில் எழுந்தவுடன்
கண் விழிக்கிறேன்.

காக்க வைத்ததற்கு
மன்னிப்புக் கேட்டு
நீ கொஞ்சி சிணுங்குகையில்
காதல் அரும்பிய காலத்தில்
காத்திருந்த வேளைகளெல்லாம்
ஞாபகத்துக்கு வந்து போகிறது.

சிறு வயதில்
சற்றே அருகில் வந்து
பேசினால்
கட்டை விரலால்
கோலமிடுவாயே
அது ஞாபகமிருக்கிறதா
உனக்கு.

எந்த தச்சன் செய்திருப்பான்
இயேசு அறையப்பட்ட
சிலுவையை.

பேயாய் ஆட்டுவிக்கிறாய்
என்னை
நீ மட்டும் மௌனமாய்
இருந்து கொண்டு.

உனது நினைவுகளால்
சிறைப் பிடிக்கப்பட்டிருக்கும்
என்னை
எப்போது விடுதலை செய்வாய்.

அப்படிப் பார்க்காதே
உனது கண்களின்
பிரகாசத்தில் நான்
பனித்துளியாய் உருகிவிடுவேன்.

நீ வீதிக்குள்
பிரவேசிக்கும் போது
மரம் காற்றுக்கு
தலையசைக்க மறுக்கிறது.

நீ பட்டாசை
பற்ற வைத்தாய்
என் இதயமல்லவோ
வெடித்துச் சிதறுகிறது.

உன்னைச் சுமப்பதினால் தான்
பாரதத்தை
புண்ணிய பூமி என்கிறார்களா?

மன்மதன் அம்பைக் கண்டு
நீ பயப்படத் தேவையில்லை
உன்னிடம் தான் இதயமே இல்லையே.

வேல் விழிகள் எனது
இதயத்தை தைத்தது
என்ன தான் நீ
மறைத்தாலும்
உனது கண்கள்
காட்டிக் கொடுத்துவிடுகிறது.

காதல் அம்பினைக்
குறிபார்த்து எய்ய
யார் கற்றுத் தந்தார்கள்
உனக்கு.

உன்னை அடைந்த பின்பு
இறந்துவிடுவேன் என்பது
விதியானால்
மரணம் கூட மகிழ்ச்சி
தரும் எனக்கு.

இதழ் விரித்து அவள்
என்னை பெயர் சொல்லி
அழைத்தால்
அக்கணமே இறந்துவிடுவேன்
நான்.

அடுத்த ஜென்மத்திலாவது
பிறக்க வேண்டும்
உன் வீட்டு
நாய்க்குட்டியாக.

நீ எறிந்தால்
இலக்கை சென்றடையும்
அம்புகள்
நான் விடுத்தால்
குறிதவறி
வேறெங்கோ பாய்கிறது.

நீ குடையை
மறந்து வந்த
சமயம் பார்த்து
மழை பெய்கிறது.

வண்ணத்துப்பூச்சி
உன் இதழில் அமர்ந்து
தேன் குடிக்க
என்னிடம் அனுமதி
கேட்டு நின்றது.

உன் இஷ்ட தெய்வத்தைக்
கண்டால்
வேண்டுதலை நிறைவேற்ற
என்ன காணிக்கைத் தருகிறாய்
எனக் கேட்பேன்.

சுயம்வரத்தில்
கலந்து கொள்பவர்கள்
அனைவரும் என்
தோற்றத்தைக் கொண்டிருந்தால்
நீ என்ன செய்வாய்.

உன் சேலைத் தலைப்பு
என் மீது பட்டபோது
நான் இருப்பது
சொர்க்கத்திலா, நரகத்திலா
என்று எனக்கே
சந்தேகம் ஏற்பட்டது.

வானுக்கு என் மேல்
கோபம்
தேவதையை நான்
என் வசமாக்கி விடுவேனோ
என்று.

நீ ஊட்டிவிடுவாய்
என்று தான் என்
கரங்களைக்

காயப்படுத்திக் கொள்கிறேன்.

புரை ஏறுகிறது
உனக்கு
தண்ணீர் குடிக்கிறேன்
நான்.

தூரத்திலிருக்கும்
கடலை நோக்கி
நதி பாய்வதைப் போல
தொலைவிலிருக்கும் உன்னை
நோக்கி
என் காதல் பாய்கிறது.

பிரிவுகளில் தான்
விருட்சமாய் வளர்ந்து
விடுகிறது
நம் காதல்.

பார்வதியின்
பாதச்சுவடை நான்
பார்த்திருக்கிறேன்
நான் ஒருவன் மட்டுமே
பார்த்திருக்கிறேன்.

இரவில்
உந்தன் நினைவு
என்னைத் தாலாட்டி
தூங்க வைக்கின்றது.

கூவி அழைத்திருந்தால்
கடவுளாவது ஓடி
வந்திருப்பார்.

நான் மெழுகுவர்த்தி
உனக்கு வெளிச்சம்
உண்டு பண்ண
என்னை நானே
எரித்துக் கொள்கிறேன்.

உன்னோடு சேர்ந்து வாழும்
வசந்த காலத்துக்காக
இலையுதிர் காலத்தை
நான் பொறுத்துக்
கொள்ளத்தான் வேண்டும்.

நினைத்தது நிறைவேற
கோயில் உண்டியலை
கோடி கோடியாக
நிரப்பினால் போதும்.

என்னைப் பற்றி
நானே அறியாத
ரகசியத்தை
யாரேனும்
அறிந்திருக்கக் கூடும்.

கண்ணாடியின் சிதிலமடைந்த
ரசப்பூச்சு உன்னை
கறை உள்ளவளாகக்
காட்டுகிறது.

பரிசில்களை நோக்கி அலையும்
இவ்வுலகத்தில்
இதயத்தைப் பறிகொடுக்க ஏனோ
நான் அலைகிறேன்.

கறுப்பு ஆடைக்குள்
புகுந்து கொண்டவர்களை
நிர்வாணப்படுத்தி ரசிக்கிறது
பகல்.

அழகை
ஆராதனை செய்பவர்கள் தான்
காதலில் தோல்வியுறுகிறார்கள்.

மின்னல் கவிதை
காட்டிக் கொடுத்துவிடும்
நீ உள்ளக்கிடங்கில்
ஒளித்து வைத்திருக்கும்
காதலை.

தகதகவென ஜொலிக்கும்
பேரழகியின் நிழல் என்னவோ
கறுப்பு தான்.

காதல்  அரங்கத்தில்
நான் புறந்தள்ளப்படுகிறேன்
என் கவிதை மட்டும்
வாசிக்கப்படுவதை
செவிமடுக்கிறேன்.

பாக்கியம் செய்த
மண்வெட்டி
எனது இறுதித் தூக்கத்திற்கு
குழி தோண்டுகிறது.

நரகத்துக்கு நாம்
நடந்தே செல்ல வேண்டும்
சுவர்க்கத்துக்கு
கண்களைக் கட்டி
கூட்டிச் செல்வார்கள்.

காதலை அருந்தினேன்
மெல்லக் கொல்லும்
விஷம் அது என்று
தெரியாமல்.

உதிர்ந்த நட்சத்திரத்திடம்
காதலின் எல்லையை
அறிதியிட்டுக் கூறமுடியாமல்
கைகட்டி  நின்றேன்.

காதல் தேவதைக்கு
காணிக்கை ஆக்கினேன்
எனது இதயத்தை.

எனது வான வீதியில்
நீ ஏன் ரதத்தைச்
செலுத்துகிறாய்.

கண்ணீர்க் கடலில்
நீந்துபவர்கள்
காதல் கரையை நோக்கி
படகினைச் செலுத்துகிறார்கள்.

சம்மதம் என்றால்
சொல்
காதல் வலையில்
நாமிருவரும் சிக்கிக்
கொள்வோம்.

வாழ்க்கை ஒரு
சுவாரஸியமான நாவல்
அடுத்தடுத்த பக்கங்களில்
தான் புதிர் அவிழும்.

நீ அழைப்பாய் எனில்
கல்லறையிலிருந்தும்
எழுந்து வருவேன்.

செத்துக் கிடந்த என்னை
உன்னுடைய காலடியோசை
உயிர்த்தெழ வைத்தது.

தயவுசெய்து சொல்லிவிடு
நீ களவாடிச் சென்ற
என் இதயத்தை
எங்கே மறைத்து
வைத்திருக்கிறாய்.

கரையை அடைந்த என்னை
தயவு தாட்சண்யம் பார்க்காமல்
மீண்டும் நீரில் தள்ளி
விடுகிறாய்.

உனது காலடித்தடங்களை
அழித்துவிட்டு உன்னைப்
பின்தொடர்ந்து வந்த
என்னைப் பார்த்து
சிரிக்கின்றது அலை.

காகிதப் பூக்களை
வண்டுகள் மொய்ப்பதில்லை.

சாபமாக இருந்த
வாழ்வு
வரமாக மாறியது
நம் சந்திப்பு
நிகழ்ந்த பிறகு.

உனது தரிசனம்
கிடைக்காத நாட்களை
காலண்டரிலிருந்து
கிழித்து எறிகிறேன்.

நிரந்தரமான முகவரியில்லை
எனக்கு
என் இதயத்தை பறித்துக்கொண்ட
அவள் என்னை
எங்கெங்கோ அலையவிடுகிறாள்.

கடைச்சரக்கல்ல காதல்
உபயோகப்படுத்திவிட்டு
தூக்கி எறிவதற்கு.

சலனமற்ற காதல் நதியில்
கல்லெறிந்து
அலைகளை உண்டாக்கி
விடாதே.

காதல் கிறுக்கு
பிடித்ததிலிருந்து
என்னை மறந்து
அனுதினமும் உன்னை
நினைத்து வாழ்கிறேன்.

காலநதி
காதல் படகை
ஆளில்லா தீவில்
கரை ஒதுக்குகிறது.

நேர்த்திக்கடனை
நிறைவேற்றித் தருவேன்
என்பதற்காகவாவது
நம் காதலை
வெற்றி பெற வைப்பாரா
கடவுள்.

புயல் கரை கடந்தது
போலிருந்தது
அவள் வீதியைக்
கடந்து செல்கையில்.

நீ குடையை
கையில் எடுத்து வரும்
நாளிலெல்லாம் மழை
பெய்ய மறுக்கிறது.

போனால் போகட்டும் என்று
விட்டு வைத்திருக்கிறேன்
உன்னைப் பின்தொடரும்
நிழலை.

கோடி கொட்டிக்
கொடுத்தாலும் ஒத்துக்கொள்ளமாட்டேன்
உன்னை மறப்பதற்கு.

என் மனதில்
அவளுக்கென்று ஒரு இடமுண்டு
அப்பா, அம்மா கூட
அதற்கு அப்புறம் தான்.

நீ உட்காருவாய்
என்பதற்காக
இருசக்கர வாகனத்தில்
பின் இருக்கையில்
நான் யாரையும்
ஏற்றுவதில்லை.

உனது
கல்மனதையும் கரைக்கும்
எனது உண்மைக் காதல்.

உனது கனவில்
நுழைவதற்கு
அனுமதிச்சீட்டு வாங்க
வரிசையில் நிற்கிறேன்.

உனக்கு எதுவும்
நடக்காவண்ணம்
உன்னை என் இதயத்தில்
பத்திரப்படுத்தி உள்ளேன்.

உனது பாதத்தடங்களை
தொடர்ந்து வந்து கொண்டிருந்தேன்
சற்று தொலைவில் நீ
சிறகு விரித்து பறக்கக்
கண்டேன்.

திரும்பத் திரும்ப
கரைக்கு வந்து
உனது பாதச்சுவடுகளை
தேடிப் பார்க்கிறது
அலை.

பனிக்காலத்தில்
உனது நினைவுகளாலே
குளிர் காய்கிறேன்.

மரத்திலிருந்து விழும் மலர்
சாபவிமோசனம் பெற்றுவிட்டது
உன் மீது உதிர்ந்ததனால்.

அவளை நினைக்கும்
போதெல்லாம்
எனது எழுதுகோல்
ஊமையாகிவிடுகிறது.

வீணையை மீட்டிட
பிறந்தது நாதம்
அவளுக்காக எதுவும் செய்வேன்
இதென்ன பிரமாதம்.

கவலைப்பள்ளம்
சமயம் பார்க்கும்
காதல் பள்ளம்
உயிரை கேட்கும்.

உன் கால்பட்ட காவிரி
கங்கையானது
உனது கண் பட்ட
எனது ஆன்மா
ஊமையானது.

உன் அழகுக்கு
நிரகான வார்த்தையை
அகராதியில் தேடி அலைகிறேன்.

தான் வரைந்த
சித்திரத்தின் மீது
காறி உமிழ்வார்கள்
ஓவியர்கள் உன்னைப்
பார்த்தால்.

இறைவனுக்கும், இறைவிக்கும்
திருமாங்கல்யத் திருவிழா
நீ மட்டும் ஏக்கத்தோடு
என் முகம் பார்க்கிறாய்.

எல்லோரும்
காதல் சிறையிலிருந்து
பரோலில் வெளிவந்த
கைதிகளே.

கோலங்களால் வாசலை
அலங்கரிக்கிறாய்
வீதியில் யார் வரவை
எதிர்பார்க்கிறாய்.

இரு கரைகளுக்கு மத்தியில்
ஓடும் நதி வெள்ளம்
செய்தி அனுப்புகிறது கடலுக்கு
விரைவில் வந்து சேர்ந்து
விடுவேனென்று.

காதல் சிறையின்
கைதிகள்
தனிமையை மறக்க
நிலவை அழைக்கிறார்கள்.

மன்மதன்
உன்னை நோக்கி
வில்லை ஏவும் போதெல்லாம்
தப்பிவிடுகிறாயே எப்படி.

நேரில் வராததற்கு
கனவில் வந்து
மன்னிப்பு கேட்கின்றாயே
இது நியாயமா.

வானவில்
கண் வைத்துவிடும்
உனது சேலையின் வண்ணத்தைப்
பார்த்து.

காதல் தீபத்தில்
என்னை மாய்த்துக் கொள்கிறேன்
விட்டிலைப் போல.

நீ வெட்கம் நீங்கி
முத்தமிட்டதை
பார்த்துக் கொண்டிருந்தது
கொல்லை பொம்மை.

சடலத்தின் மீது
அமர்ந்த ஈ
பயணப்பட்டது மயானத்துக்கு.

என் ஆன்மா துக்கப்பட்டது
மகத்தான கவிதைகளை
வாசிக்கும் போது இதைப்போல
எழுதமுடியவில்லையே என்று.

அக்கா குருவி
வசந்தகாலத்தை கூவி
அழைக்கிறது
பூபாளம் பாடியபடியே
பொழுது விடிகிறது.

மழைநாள் இரவு
பேய்க்காற்று
மெழுகுவர்த்திச் சுடரை
அங்குமிங்கும்
அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

நான் அலாரத்தை
நிறுத்திவிட்டுத் தூங்குகிறேன்
ஆனால் வீடு மணியோசையில்
விழித்துக் கொள்கிறது.

திலகமணியாத பெண்களைப்
பார்க்கையில்
நிலைக்கண்ணாடி அழுகிறது.

சாளரத்தின் வழியே
நிலவு எட்டிப் பார்க்கிறது.

கண் தூண்டில் போடுகிறது
உடம்பு காயப்படுகிறது
காதலால் இறந்தவர்கள்
தேவதையாய் அலைகிறார்கள்.

கவலையை மறக்க
சிகரெட்
போதையில் மிதக்க
மது
தன்னிலை இழக்க
குமரி
வீழ்ந்தது அவன் மானம்
சிரமப்பட்டு
எழுவது தான் ஞானம்.



ப.மதியழகன்(**28.3.1980**)

திருவாரூர் மாவட்டம் – மன்னார்குடி எனும் நகரத்தைச் சேர்ந்தவர் ப.மதியழகன்.நாகை வலிவலம் தேசிகர் பாலிடெக்னிக்கில் மெக்கானிக்கல் பிரிவில் டிப்ளமா பெற்றவர்.கீற்று, வார்ப்பு, திண்ணை, உயிரோசை, பதிவுகள், மலைகள் ,உன்னதம் ஆகிய இணைய இதழ்களிலும், நவீன விருட்சம், அம்ருதா, தாமரை,இனிய உதயம் ஆகிய இலக்கிய இதழ்களிலும், குங்குமம் போன்ற வெகுஜன இதழ்களிலும் இவரது கவிதைகள் வெளிவந்துள்ளது.

முதல் கவிதை தொகுப்பு தொலைந்து போன நிழலைத் தேடி **2008**ல் வெளிவந்தது.இரண்டாவது கவிதை தொகுப்பு சதுரங்கம் **2011**ல் வெளிவந்தது. மூன்றாவது கவிதை தொகுப்பு புள்ளிகள் நிறைந்த வானம் **2017**ல் வெளிவந்தது. நான்காவதாக கட்டுரைகளும்,கவிதைகளுமாக துயர்மிகுவரிகள் **2017**ல்

வெளிவந்தது.இணைய இதழ்களில் இவரது சிறுகதைகளும் வெளிவந்துள்ளது.

தற்போது மன்னார்குடியில் தனியார் மையத்தில் கணினி பயிற்றுனராக வேலை செய்து வருகிறார்.